


# சொல்வயல்

## திங்கள் மின்னிதழ்

சொல்வளமே மொழிவளம் நெல்வளமே நாட்டின்வளம்

" சொற்சுவை தேரும் பாவலர் மேவத் தொகுப்பீடம்"
(திருவிளையாடற்புராணம்–
தருமிக்குப் பொற்கிழியளித்த படலம்)

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு

வயல் : 6 விளைச்சல் : 57 திருவள்ளுவர் ஆண்டு 2056, கும்பம் – பிப்பிரவரி – 2025









- இயந்திரத் தொழில்நுட்பவியல் துறைக் கலைச்சொற்கள்
- தொன்மைச் செம்மொழி
- வேர்ச்சொல் : மாக்கசுமுல்லர், புளூம்பீல்டு, கிளீசன், பாவாணர்
- இந்தச் சொல்லுக்கு ஏன் இந்தப் பொருள் (வேர்ச்சொல் துணுக்கு விளக்கம்)
- இரண்டாம் குறட்பாவின் தொடர்ப் பொருண்மை
- இயக்ககச் செயற்பாடுகள்

# இயந்திரத் தொழில்நுட்பவியல் துறைக் கலைச்சொற்கள்

| | |
|---|---|
| Auto collimator | திருப்புக்கோண அளவி |
| Annealing | பதனாற்றுதல் |
| Bending test | வளைதிறன் ஆய்வு |
| Broaching machine | கொந்து பொறி |
| Carburettor | கரிவளி கலப்பி |
| Critical temperature | மாறுநிலை வெப்பநிலை |
| Dial gauge | சுழலளவி, வட்டளவி |
| Electrical comparator | மின் ஒப்பளவி |
| Enlarger | உருப்பெருக்கி |
| Filler rod | நிரப்புக் கம்பி |
| Fitting shop | பொருத்துப் பட்டறை |
| Gas welding | வளிமப் பற்றாசு |
| Gear hopper | பல்லிணை வைகலன் |
| Grinding machine | அரைவைப் பொறி |
| Hand tools | கைக் கருவிகள் |
| Load test | சுமைத்திறன் ஆய்வு |
| Machine shop | பொறிப் பட்டறை |
| Metrology laboratory | அளவை ஆய்வுக் கூடம் |
| Planer | இழைப்புளி |
| Pressure welding | அழுத்தப் பற்றாசு |
| Roll welding | உருள் பற்றாசு |
| Rolling mill | உருட்டு ஆலை |
| Seam welding | மடிப்புப் பற்றாசு |
| Touch welding | தொடு பற்றாசு |
| Ultrasonic machine | மீயொலிப் பொறி |

**சொற்குவை (sorkuvai.com) வலைத்தளத்தில் தமிழுக்கு நிகரான ஆங்கிலச் சொற்களையும், ஆங்கிலத்திற்கு நிகரான தமிழ்ச்சொற்களையும் பார்த்துப் பயன்கொள்ளலாம்.**

# சொல்வயல்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தின் வெளியீடு
திருவள்ளுவர் ஆண்டு 2056, கும்பம் (மாசி)
பிப்பிரவரி – 2025

ஆசிரியர் : திருமதி **க. பவானி**
இயக்குநர் (மு.கூ.பொ.)

பொறுப்பாசிரியர் : முனைவர் வே. கார்த்திக்

இதழ்க்குழு : திரு. கி. இராமர்
திரு. ஏ. காந்தி
திருமதி. க. கத்தூரி

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
முதல் தளம், நகராட்சி நிருவாக அலுவலகக் கட்டடம்,
எண்.75, சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்,
சென்னை – 600 028.
மின்னஞ்சல் : solvayal@gmail.com
வலைத்தளம் : www.sorkuvai.com

Directorate of Tamil Etymological Dictionary Project,
First floor, Urban Administrative office Campus,
No:75,Santhome high Road,
MRC Nagar, Chennai–28
Mail id : solvayal@gmail.com
Website : www.sorkuvai.com

ஐ.எஸ்.பி.என் (ISBN): 978-81-958032-0-0

# தொன்மைச் செம்மொழி!

உயர்தனிச் செம்மொழியான தமிழ் சொல்வளம் மிக்க தொன்மைமிகு மொழியாகும். காலத்தால் முந்திய மொழிகளில் சொற்கள் மிகக் குறுக்கமாக இருக்கும் என்பது மொழியியலாளர்களின் கருத்தாகும். அந்தவகையில் பார்த்தால் தமிழின் சொற்களைக் கொண்டே, அதிலும் குறிப்பாக ஓரெழுத்து ஒருமொழிச் சொற்களைக் கொண்டே அதன் தொன்மையை நாம் உய்த்தறிய முடியும்.

நன்னூலாசிரியர் பவணந்தி முனிவர் தமிழில் 42 ஓரெழுத்து ஒருமொழிச் சொற்கள் இருப்பதாகக் குறிப்பிடுகிறார். அவற்றுள் நொ, து, ஆகிய இரு சொற்களைத் தவிர எஞ்சிய 40 சொற்களும் நெடில் எழுத்துகளால் அமைந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

தமிழ்ச்சொற்களின் வேர்களை ஆராய்ந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் ஓரெழுத்துச் சொற்கள், ஈரெழுத்துச் சொற்களிலிருந்து பிற்காலத்தில் எவ்வாறெல்லாம் சொற்கள் உருவாகி வந்துள்ளன என்பதை விளக்கியுள்ளார்.

'ஏ' என்னும் ஓரெழுத்து ஒருமொழிக்கு 'உயர்ச்சி' 'அம்பு' என்ற பொருள்கள் உள்ளன. 'ஏ' என்ற வேர்ச்சொல்லிலிருந்து வந்துள்ள சொற்களுள் சிலவற்றைப் பாவாணர் கீழ்க்காணுமாறு விளக்கியுள்ளார்.

ஏ = உயர்வுக் குறிப்பு
ஏண் = உயரம், பெருமை "ஏ பெற்றாகும்" (தொல். உரி.8)
ஏண் = ஏணி, ஏணி = உயரப் போக்குவது
ஏணை = ஏந்துவது, தொட்டில்
ஏண் – சேண் = உயரம். சேணுலகம் = வானுலகம் (இந்திரனுலகம்)
சேணோன் = இந்திரன்
ஏத்து = உயர்த்திப் பேசு, புகழ்
ஏந்து = கையுயர்த்தித் தாங்கு
ஏங்கு = அடிவயிற்றினின்று காற்றையெழுப்பி மூச்சுவிடு. பெருங்கவலை கொள்
ஏக்கம் = பெருங்கவலை, பேராத்திரம்
ஏய் = ஏறு, பொருந்து, ஒத்திரு, ஏமாற்று
ஏர் = எழுச்சி, அழகு, பயிரை எழச்செய்தல், உழவு, உழுகருவி
ஏல் = மேலாகக் கொள், ஏற்றுக்கொள்
ஏழ் = எழு, ஒலி, ஓரெண்
ஏ – எ = வினாவெழுத்து
எது? எங்கு? என்று?

இவ்வாறு, தொன்மையானதும் சொல்வளம் மிக்கதுமாகிய உயர்தனிச் செம்மொழியான தமிழ்மொழி எம்மொழி என்று சொல்வதில் பெருமைகொள்வோம். எங்கும் தமிழ்! எதிலும் தமிழ்! என்ற தமிழ்நாடு அரசின் இலக்கை நோக்கி எப்போதும் செயலாற்றுவோம். தமிழ் நம் முதல் அடையாளம் என்ற எண்ணத்தையும் மொழிப்பற்றையும் இளைய தலைமுறை உள்ளங்களிலும் விதைப்போம்.

தமிழைச் சொல்வோம்! தமிழால் வெல்வோம்!

# அகரமுதலி இயக்ககத்தில்
# மொழிஞாயிறு பாவாணரின் 123ஆவது பிறந்தநாள் விழா!





## அகரமுதலி இயக்ககத்தில்
## மொழிஞாயிறு பாவாணரின் 123ஆவது பிறந்தநாள் விழா!

தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் 07.02.2025ஆம் நாள் "மொழிஞாயிறு" தேவநேயப் பாவாணரின் 123ஆவது பிறந்தநாள் விழா சிறப்பாகக் கொண்டாடப்பட்டது.

தொன்மைமிகு தமிழ்மொழி தனித்தியங்கும் தன்மைகொண்டது என்பதையும், தமிழுக்கும் உலக மொழிகளுக்குமான சொல்நிலை உறவையும், முந்துதமிழ் உலக மொழிகளுக்கு வழங்கிய சொற்கொடையையும் வேர்ச்சொல்லாய்வின்வழி நிலைநாட்டியவர் "மொழிஞாயிறு" ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள். அப்பெருமகனாரின் 123ஆவது பிறந்தநாள் நிகழ்வில் அகரமுதலி இயக்கக அலுவர்கள் மற்றும் பணியாளர்கள் பாவாணரின் திருவுருவச் சிலைக்கும் திருவுருவப் படத்திற்கும் மாலை அணிவித்துப் புகழ் வணக்கம் செலுத்தினார்கள்

# வேர்ச்சொல் : மாக்கசுமுல்லர், புளூம்பீல்டு, கிளீசன், பாவாணர்



முனைவர் இரா.கு.ஆல்துரை
தமிழ்நாட்டரசின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருதுபெற்றவர்

## வேர்

மொழியில் சொற்கள் பொருளுடன்தான் இருக்கின்றன. இது மொழிச் சொற்களின் அடிப்படை இயல்பு. பெயர், வினை, இடை என்னும் மூவகைச் சொற்களும் பொருளுடந்தான் மொழியில் உள்ளன. இதைப் பறைசாற்றும் வகையில் எழுந்தது தான் "எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே" என்னும் தொல்காப்பிய (639) இலக்கணம். இன்றைய நிலையில் உருபு, ஒட்டு போன்ற இடைச் சொற்கள் இலக்கணப் பொருள் உணர்த்துவனவாக உள்ளன. அவற்றின் பொருளை அறிய இயலுவதில்லை. என்றாலும் இவை முன்னர் முழுச்சொற்களாக இருந்துள்ளன. என்றும் அப்பொழுது –இவை சொற்பொருள் உணர்த்து வனவாக இருந்துள்ளன என்றும் மொழியியல் அறிஞர்கள் குறிப்பிடுகின்றனர்.

"எடுத்த எடுப்பில் இலக்கண வடிவங்கள் எவ்வளவு சிக்கலானவை யாகவும் மறைபொருளைக் கொண்டனவாகவும் காணப்பட்டாலும் அவை உண்மையில் மிகவும் எளிமையான ஒரு செயல்முறையின் விளைவின் காரணமாக உருவானவையாக இருக்கின்றன…… .ஒப்பீட்டு இலக்கணத்தின் நுண்ணோக்கியின் கீழ் வைத்துப் பார்த்தால் இவைஅனைத்தும்மிகவும்மாறுபட்டனவாகவும், எளிமையாகப் புரிந்துகொள்ளக் கூடிய தன்மையினவாகவும் இருக்கின்றன என்பது புலப்படும். இப்போது நாம் சொல்லீறுகளாகக் கொண்டிருப்பவை எவ்வாறு முன்னர் சொற்களாக இருந்துள்ளன என்பதைக் காணலாம். அவை மாற்றியமைக்கும் நோக்கம் கொண்ட சொற்களுடன் ஒன்றிணைந்த பிறகு, அவை தம்மளவில் பொருள்களை இழந்து படிப்படியாக வெறும் அசைகளாகவும், எழுத்துகளாகவும் குறைக்கப்பட்டுள்ளன. இருந்தாலும் அவை சேர்க்கப்பட்டுள்ள சொற்களின் பொருளில் தொடர்ந்து உருவாக்கும் மாற்றத்தால் அவற்றின் முந்தைய ஆற்றலையும் தனித்தன்மையையும் வெளிப்படுத்துகின்றன" (MaxMuller 1965:260).

வழக்கிலுள்ள பெயர், வினை, இடை என்னும் சொற்கள் அனைத்தும் வேர்கள் என்றழைக்கப்படும் சொற்கூறுகளிலிருந்து வளர்ந்து வந்துள்ளன. ஒரு மொழியிலுள்ள சொற்கள் மிகப்பலவாக இருந்தாலும் அவை உருவாக்கம் பெறுவதற்கு அடிப்படையாய் இருந்த வேர்கள் சிலவாகத்தான் இருந்துள்ளன. ஒரு மொழியில் உருவாகும் புத்தாக்கச் சொற்களெல்லாம் ஏற்கெனவே அம்மொழியில் அப்பொழுதிருந்த சொற்களி லிருந்துதான் உருவாக்கப் படுகின்றன. வழக்கிலுள்ள சொற்களைப் பிரித்தல், சேர்த்தல், சுருக்குதல் போன்ற வகையில் புதுச் சொற்கள் உருவாகின்றன.

சொற்களில் வேர்ப்பொருள் உணர்த்தும் கரணியக் குறிகள் பொதிந்து கிடக்கின்றன. இத் தன்மையைத் திரிபு எய்தாது இருக்கும் சொல்லில்தான் காண இயலும். சொல் திரிந்த நிலையில் அதுவும் இருமடி, மும்மடி என்று திரிபுற்ற நிலையில் அதன் வேர்ப் பொருள் உணர்த்தும் கரணியத்தன்மை எளிதில் அறிய இயலாத அளவிற்கு மறைந்து இருக்கும். அவ்வகையில் தமிழில் இருக்கும் சொற்கள் பல திரிபு எய்தாத இயல் நிலையில் இருக்கின்றன. ஆகையால் அவை அவற்றின் வேர்ப்பொருள் உணர்த்தும் கரணியங்களைக் காட்டுவனவாக உள்ளன.

மொழியியலில் வேர், அடி, என்பன சொல்லின் மூலத்தைக் குறிக்க ஆளப்படுகின்றன. விளக்கத்திற்கு இவற்றை வேர்ச்சொல் என்றும் அடிச்சொல் என்றும் குறிப்பிடுகின்றனர். இவையன்றி தொல்காப்பியம் கிளவி, சொல், மொழி என்பனவற்றையும் வேரைக் குறிக்க ஆண்டுள்ளது. வேர் (root), அடி (stem) ஆகிய

இரண்டும் வெவ்வேறானவை. வேர் முந்தையது அதனின்று வளர்ந்தது அடி.

"சொற்பிறப்பியல் துறையில், ஒரு சொற்குடும்பத்திற்குப் பொதுவான, சொல்லின் பகுதியாக இருப்பதும் இனவடிப்படையில் தொடர்புடைய மொழிகளில் இனச்சொற்களைக் கொண்டிருப்பதும் வேர் ஆகும். வரலாற்றுத் திரிபால் தாய்மொழி பேசுபவர்களுக்குக் கூடத் தெளிவாகத் தெரியாமல் போகலாம். எ.கா: salary யில் உள்ள sal- < இலத்தீனம் solarium ‹உப்பு அகவிலைப்படி < சொற்பிறப்பு sal 'உப்பு'. குறிப்பாகக் கலைச் சொற்களை உருவாக்குவதற்கும், பொருத்தமான பொருள் தொடர்புகள், சொல் உருவாக்கும் செயல்முறைகள் ஆகியவற்றைப் புரிந்துகொள்வதற்கும் வேர்களைப் பற்றிய அறிவு உதவும் என்று கருதப்படுகிறது. இருப்பினும், அத்தகைய அறிவைத் தூய்மை யியலாளர்கள் 'உண்மையான பொருள்கள்', 'சரியான வடிவங்கள்' ஆகியவற்றிற்கான கூற்றுகளை உருவாக்கப் பயன்படுத்தலாம். தவறாகவும் பயன்படுத்தலாம்" (R.R.K.Hartmann & Gregory James, 2002:120)

### வரையறை

1.) மொழியாய்வில் வேர்ச்சொல் மிகவும் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது, 2.) வேர்ச்சொல் என்பது ஒரு சொல்லின் நடுவப் பகுதியாக இயங்குவதைச் சுட்டுவது, 3.) மொழியைப் பகுத்து ஆராயும் போது இறுதியாகக் கிடைக்கும் அடி நிலைக் கூறே வேராகும் என்று வேர்ச்சொல் என்பதற்கு எருதந்துறை சுருக்க அகரமுதலி வரையறை தருகிறது. வேருடன் முன்னொட்டு அல்லது பின்னொட்டுச் சேர்வதால் அல்லது மாற்றம் பெறுவதால் சொற்கள் உருவாகின்றன என்றும், வேர் சொல்லாக இயங்கும் தன்மையிலும் இருக்கலாம், சொல்லாக இயங்கும் தன்மை இல்லாமலும் இருக்கலாம் என்றும் வேர்ச்சொற்களைப் பற்றியும் அவற்றோடு இணைந்து வரும் ஒட்டுகளைப் பற்றியும் மொழியியல் அறிஞர்கள் தெளிவுபடுத்தி யுள்ளனர். அவர்களின் வரையறை, விளக்கம் ஆகியவற்றை அறிவதால் வேர்ச்சொல்லைப் பற்றிய தெளிவு பிறக்கும். அவ் வகையில் மொழியியல் அறிஞர்களான மாக்கசுமுல்லர், புளும்பீல்டு, கிளீசன் ஆகியோரின் வேர்ச்சொல் பற்றிய குறிப்புகளையும் அவற்றோடு ஒன்றுபடும், மாறுபடும் பாவாணரது கருத்துகளையும் இக்கட்டுரை தாங்கி நிற்கிறது.

### மாக்கசுமுல்லர்

மொழியியல் ஆய்வு பத்தொன்பதாம் நூற்றாண்டில் முனைப்பாக நடைபெற்றது. இதற்குத் தார்வினின் (1809-1882) கூர்தலறக் கொள்கை பெரும் ஊக்கமாக விளங்கியது. வில்லியம் சோன்சு (1796) சமற்கிருத மொழிக்கும் இலத்தீனம், கிரேக்கம், செருமானி, கோத்திக்கு போன்ற மொழிகளுக்கும் இடையே உள்ள உறவை ஆராய்ந்தார். அக்காலக் கட்டத்தில் வாழ்ந்த பிரடரிக்கு மாக்கசு முல்லர் (1823-1900) மொழியியலுக்கு, குறிப்பாக ஒப்பீட்டு மொழியியலுக்குப் பெரும் பங்களிப்பு செய்தார். மொழித்தோற்றத்தைப் பற்றி இவர் பெருமளவு ஆராய்ந்துள்ளார். தொடக்கத்தில் பலர் ஒன்றாகக் கூடிப் பணி செய்த போது சொற்கள் உருவாகி யிருக்க வேண்டும் என்றும் மக்கள் தங்கள் கருத்துகளுக் கேற்ப சொற்களை உருவாக்கிக் கொண்டனர் என்றும் விளக்கினார். அந்த வகையில் ஒரு சொல்லுக்கு மக்கள் ஏற்றிய பொருள் மட்டும் அங்குப் பொதிந்து இருக்கும் என்றும் அச்சொல்லில் அப்பொருளை மட்டுமே பின் வருவோர் பயன்படுத்தி வருவர் என்றும் விளக்கினார்.

"மேலும் பகுக்க இடம் தராததாக விளங்குகின்ற வேர்களும் கருத்துகளைத்தான் தெரிவிக்கின்றன. இந்தக் கருத்துகளின் தடயங்களை நம் புலனுணர்வின் எளிய நிலைக்கு முன்னோக்கிக் கொண்டு செல்ல முடியும். அவை தமக்குள் பொதுவான அல்லது கருத்துப் பிழிவில் முதல் கருநிலையைக் கொண்டிருக்கும். இதன் இன்றியமையாமையைக் குறைத்துக் கூறுவாறுமுளர். அவர்கள் வேர் என ஒன்றில்லை என்று மறுக்கின்றனர். ஆனால் ஒரு காலக்கட்டத்தில் மொழி வேர் மட்டும் கொண்டதாக இருந்ததா என்பது பொருளற்ற வினாவாகும். நாம் வேரென்று கொள்வது பகுப்பினின்று பிரித்தெடுப்பதையே. அவ்வாறாயின் இதற்கு முன் வேர்களே மொழியாகச் செயல்பட்டன என்று சொல்வதற்கில்லை. ஒரு சொல் பலுக்குதலில் வேரைப்போன்ற அமைப்பு இருந்தாலும் அது

சொற்றொடரில் இடம் பெற்ற பின் வேரென அழைக்கப்படும் தகுதியை இழந்துவிடுகிறது. உண்மையான மொழியை நாம் வேரளவில் காணவியலாது.

ஒலியன் பகுப்பில் கருத்தடிப்படை யானவையாக நாம் கொள்ளும் வேர்களை மொழியின் முதன்மையான கூறுகள் என்று கருத வேண்டியதில்லை. இறுதி என்பது இன்றுள்ளவற்றின் தொடக்கம் எனக் கொண்டால் நமக்குத் தொடக்க வேர்நிலையைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று கொள்ள வேண்டும். இறுதியானது எனக்கொள்வது நம்மால் இயன்றவரை முன்னுக்குக் கொண்டுசென்று குறிப்பதாகும். மொழியில் முதன்முதல் தோன்றிய கூறுகளைப் பற்றி அறிய முடியும் என்னும் நம்பிக்கை இல்லை. இதற்கு முன் வேர்களின் தலைமுறைகள் பல அழிந்திருக்கக் கூடுமென நம்பலாம். ஆனால் அவ்வாறு கொள்வதற்கு அறிவியல் ஆதாரம் ஏதுமில்லை. சமற்கிருதத்தின் பெரும்பாலான சொற்கள் 800 வேர்களிலிருந்துதான் தோன்றியுள்ளன என்பர். இக்கால மொழிகள் சொல்வளம் மிக்கனவாக இருந்தாலும் அவற்றை விளக்குவதற்குக் குறைந்த எண்ணிக்கையிலான வேர்கள் போதும். பழங்காலத்துப் பதிவுகள் கிடைத்தாலொழிய வேர்கள் மட்டும் இருந்தன என்பதை நாம் கொள்வதில்லை" (MaxMuller 1987:pre.xii–xiii).

### புளூம்பீல்டு

அமெரிக்க மொழியியல் அறிஞரான புளூம்பீல்டு (1887–1949) அமைப்பு மொழியிலுக்கு (structural linguistic) ப் பெரும் பங்காற்றியுள்ளார். இவரது மொழி (Language) என்னும் புகழ் வாய்ந்த புத்தகம் 1993–ல் வெளியிடப்பட்டது. இவர் வண்ணனை மொழியியலுக்குப் பெரும் பங்காற்றியுள்ளார் அதே நேரத்தில் இந்தோ –ஐரோப்பிய மொழிகள் தொடர்பான வரலாற்று மொழியியலுக்கும் தம் பங்களிப்பைச் செலுத்தியுள்ளார். வண்ணனை மொழியியலுக்குத் தாம் தொகுத்த தரவுகளைக் கொண்டு ஒப்பீடும் செய்துள்ளார். இதன் வழி முந்து வடிவத்தை மீட்டுருவாக்கம் செய்யும் வழிவகையையும் காட்டியுள்ளார்.

"காலப் பழைமையின் அடிப்படையில் வேர்கள் விளக்க வியலாத மறைபண்புகள் பலவற்றைக் கொண்டுள்ளன என்று பலர் கருதுகின்றனர். வேர்கள் முன்னர் தனிச் சொற்களாகப் பேசப்பட்டன என்றும் கருதப்பட்டு வந்தது. இவ்வாறு கொள்வதற்கு அடிப்படை ஏதுமில்லை. பிற கட்டுருபன்களைப் போன்று சொற்களுக் கிடையே காணப்படும் ஒற்றுமைப் பகுதிகளே வேர்கள். ஒட்டுகள் எதுவுமில்லாம லிருக்கும் சொற்களை முதல்நிலை வேர்ச் சொற்கள் (root word) என்று கொள்கின்றனர். முதல்நிலை வேர் சொற்களில் இடம்பெறும் வேர் தனியாக இயங்கும் வேராகும். கட்டுருபன்களாக வரும் வேர்கள் எப்பொழுதும் முதனிலை ஒட்டுகளுடன் இருக்கும்.

முதனிலை ஒட்டுகளுக்கும் வேர்களுக்கும் இடையே காணப்படும் வேறுபாடு யாதெனில் முதனிலை ஒட்டுகள் எண்ணிக்கையில் சில; பொருள் தெளிவில்லாதன.வேர்களோஎண்ணிக்கையில் பல; தெளிவான பொருள் குறிப்பு உடையன.

ஒரு தனிச்சொல்லில் ஒரு வேர் மட்டும் இருக்கும். ஒரு மொழியின் வேர்கள் உருபன் வடிவங்களின் எண்ணிக்கையில் மிகுதியானவை. அவை வெவ்வேறு வகையானவை. ஆனால், தெளிவான பொருள் கொண்டவை. கட்டுருபன்களாக இயங்கும் வேர்களும் தெளிவான பொருள்களைக் கொண்டிருக்கும்.

ஒரு மொழியின் வேர்கள் பொதுவாக ஒரே சீரான அமைப்பைக் கொண்டிருக்கும். பெரும்பான்மையான மொழிகளில் பெரும்பாலான வேர்கள் உருபன்களாக இருக்கும்" (Bloomfield 1935:240–244).

### கிளீசன்

சென்ற நூற்றாண்டில் புதியதாக வண்ணனை மொழியியல் மொழியியலில் ஒரு பாடமாக வந்த போது முதன் முதலில் அதற்கு ஒரு பாடநூலை உருவாக்கியவர் மொழியியல் அறிஞர் கிளீசன் (1917–2007). இன்றளவும் பாடபுத்தகமாக இருந்துவருவது இப் புத்தகத்தின் சிறப்பாகும்.

"வேர்களும் ஒட்டுகளும் மொழியில் மிகப்பரந்து இடம்பெற்றுள்ள பிரிவுகளாகும். இவற்றுள்ளும் வேர்களோ பரந்துபட்ட வழக்குடையன. பல வேர்கள் தனிச் சொற்களாக இயங்க வல்லன. வேர்கள் எண்ணிக்கையில்

பலவாயிரக் கணக்கின. பெரும்பான்மை ஒரு மொழியின் சொற்களஞ்சியத்தில் பெரும் எண்ணிக்கையினவாக இருக்கும் வேர்கள் சொற்களின் நடுவங்களாக விளங்குகின்றன. பொதுவாக ஒட்டுகள் வேர்களுக்குத் துணையாக இயங்குவன. பெரும்பாலும் ஒட்டுகளைக் காட்டிலும் வேர்கள் வடிவத்தில் பெரியனவாக இருக்கும். வேர், ஒட்டு ஆகியவற்றை அனைத்து மொழிகளுக்கும் பொருந்துமாறு வரையறுப்பது சிக்கலானது. எனினும் மொழியியலாளர்கள் இவற்றின் தன்மைகளை விளக்கி யுள்ளனர்.

ஒட்டுகள் இணையக்கூடிய வகையில் அமையும் உருபன் அல்லது உருபன்களின் தொகுதி அடி (stem) ஆகும்.

சில அடிகள் அல்லது சொற்கள் இரண்டு அல்லது இரண்டிற்கும் அதிகமான வேர்களைக் கொண்டிருக்கும். இவ்வாறு வருவன தொகை (compound) ஆகும்" (Gleason1955:58–59).

இம்மூன்று அறிஞர்களும் சொல்லின் மூலக்கூறாக அமைவது வேர் என்பதைக் குறிப்பிட்டுள்ளனர். புளூம்பீல்டு மீட்டுருவாக்கம் பற்றிக் குறிப்பிடுவதிலிருந்து பழைய வடிவங்களை அறிய இயலும் எனக் கொண்டாலும், அறப்பழங்காலத்தில் இருந்த வேர்களைப் பற்றிய குறிப்பு அவரது வேர்பற்றிய ஆய்வில் இல்லை. இவர்களுள் மாக்கசு முல்லர் வேர்களை இயன்ற அளவு முன்னோக்கிக் கொண்டு சென்று வேர்களின் எண்ணிக்கையைச் சிலவாகக் காட்டும் கருத்துடையவர். வேர்கள் கருத்துகளைக் குறிப்பன என்று கருதுபவர். அதிலும் கருத்துகளின் தொடக்க நிலையைக் குறிப்பன என்று மொழியின் பழைய நிலையைக் காட்டுவார்.

### பாவாணர்

சொல்லின் வடிவங்களைப் பல்வேறு கோணங்களில் ஆராய்ந்தவர் பாவாணர். பாவாணரின் சொல்லாய்வுப் பாங்கு வேரிலிருந்து சொல் வளர்ந்துள்ள நிலையை ஆராய்கிறது. வண்ணனை மொழியியலாளர்கள் சொல்லின் ஈறுகளையும் ஒட்டுகளையும் நீக்கிய பின் இறுதியாக நிற்கும் பகுதியை வேரென்று அழைக்கின்றனர். அதாவது சொல்லைப் பகுத்து ஓரசையாக அல்லது ஈரசையாக நிற்கும் அதன் முதற்பகுதியை வேர் என்று சுட்டுகின்றனர். ஆனால் பாவாணரோ அதற்கு முந்தைய நிலையைச் சுட்டுகிறார். "சொன்மூலம் வேர் (root). அடி (stem), முதனிலை (theme) என மூவகைப்படும். வேரும் முதல் வேர், வழிவேர், சார்புவேர் என முத்திறப்படும். முதல் வேருக்கு மூலம் முளையாகும். முளைக்கு மூலம் வித்தே. அடி என்பது கவையுங் கொம்புங் கிளையும் போத்துங் குச்சுமாகப் பிரியும். இவையெல்லாம் தமிழ் போன்ற இயன்மொழியிலேயே தெளிவாய்க் காணப்படும்" (பாவாணர் 1967:291) என்று நுண்ணிதாகப் பகுத்து ஆராய்ந்துள்ளார். மேலும் வேரைப் பற்றிக் குறிப்பிடும்போது

"வேரின் வளர்ச்சியே அடியும், அடியின் வளர்ச்சியே முதனிலையும் ஆகும். பல அடிகட்கு வேரும், பலமுதனிலைகளுக்கு அடியும் வேரும் மறைந்திருக்கும் அல்லது இறந்து பட்டிருக்கும். வேருக்கு மூலமான முளையும் உண்டு. வேர்ச்சொற்கு முளையும் விதையும் வேறெம் மொழியிலும் காணவியலாது. வேரும் ஆணிவேர், பக்கவேர், கிளைவேர், சிறு கிளைவேர் எனப் பலதிறப்படும். வேர் என்னும் உவமையாகுபெயர் பற்றி வேர்ச்சொல்லை முத்திறப்படுத்திக் கூறினும், மூலமும் திரிவும் என்னும் முறையில் வேர் அடி முதனிலை என்னும் வகையீடும் ஒன்றே.... வேர்ச்சொற்கள் சிறுவேரும், பெருவேரும் என இருவகைய. அவற்றுள் முன்னவை பன்னூற்றுக் கணக்கின. பின்னவை ஒரு நூற்றுக்குட்பட்டவை. சமற்கிருதத்திலும் மேலையாரிய மொழிகளிலும் வேர்ச்சொல்லெனக் காட்டப்படுபவை உண்மையாக வேர்ச்சொல்லும் அல்ல. உண்மையான சிலவும் தமிழினின்று திரிந்தவையே" (பாவாணர் 1973 முக.:7–11) என்றும் குறிப்பிடுவார்.

பாவாணர் நெறிப்படி விதை, முளை, வேர், அடி, முதனிலை போன்று சொன்னிலை வளர்ச்சிப் பெறுகிறது. மொழியின் வேர்கள் ஒரு சிலவாக இருக்கின்றன என்பதில் பாவாணர் கருத்து ஏறக்குறைய மாக்கசு முல்லரின் கருத்தோடு ஒத்துவருகிறது. என்றாலும் பாவாணர் ஆய்வு வேர்களைச் சுட்டடி வரை கொண்டு செல்கிறது. வேர்கள் கருத்தடிப்படையில் தோன்றின என்பதிலும் இவ்விருவரும் ஒத்த கருத்துடையவர்களாக இருக்கின்றனர்.

மொழியின் தொடக்கக் காலத்தில் வேர்களே மொழியாய்ச் செயற்பட்டன என்பது பவாணரின் கருத்து. இது மொழியியலாளர் கருத்துக்கு மாறாக உள்ளது. மொழி தோன்றிய போது மிகக் குறைந்த எளிய ஒலிகளைக் கொண்டே மொழியின் பயன்பாடு நிறைவேறியிருக்க வேண்டும். அக்குறைந்த எண்ணிக்கை ஒலிகளிலிருந்தே பின்னர் மொழி வளர்ச்சி பெற்றிருக்க வேண்டும் என்பது பாவாணரின் ஏரண முறையிலான சிந்தனைக் கருவாகும். இக்கருவை அறிவியல் அடிப்படையில் விளக்கவியலாது என்னும் அடிப்படையிலேயே பிறர் ஏற்கத் தயங்குகின்றனர். வேர்கள் மொழியாகப் பயன்பட்டிருக்க முடியுமா என்று மாக்சு முல்லர் முதலில் ஐயப்பட்டாலும் பின்னர் வேர்கள் சொற்களாகப் பயன்பட்டிருக்க வேண்டும் என்று குறிப்பிடுகிறார் (Max Muller 1888: pre.xii–xiii). சில கருத்துகள் பிற அறிஞர்கள் கருத்துகளோடு ஒத்து வந்தாலும் பாவாணரது சொல்லாய்வு தனித் தன்மை வாய்ந்தது. இந்தத் தனித்தன்மைக்கு அடிப்படையாய்ப் பாவாணர் குறிப்பிடுவது தமிழ் ஓர் இயன்மொழி. அதனலேயே அது இத்தகைய வேராய்வுக்கு இடமளிக்கிறது என்பதாகும்.

## குறிப்புதவி நூல்கள்


1.) பாவாணர், 1973, வேர்ச்சொற் கட்டுரைகள், கழகம், சென்னை

2.) பாவாணர், 1967, வடமொழி வரலாறு, நேசமணி பதிப்பகம், காட்டுப்பாடி

3.) Bloomfield, L., 1996, Language, Motilal Banarsidas, New Delhi (First Published 1935).

4.) Gleason,Jr.H.A.,1955, An Introduction to Descriptive Linguistics, Henry Holt And Company, New York

5.) MaxMuller,F.,1965, Lectures on the Science of Language. Munsiram Manoharlal, New Delhi (First published 1861).

6.) MaxMuller,F.,1987, Biographies of Words and the Home of the Aryas, AES, New Delhi (First published 1888).

7.) R.R.K.Hartmann & Gregory James, 2002, Dictionary of Lexicography, Routledge London and New York, First published 1998


### தமிழ்த் துணை எழுத்துகளின் பெயர்கள்

மேல்விலங்கு: கி, ஙி, சி, ஞி. டி, ணி, தி, நி, பி, மி, யி, ரி, லி, வி, ழி, ளி, றி,னி
மேல்விலங்குச் சுழி: கீ, ஙீ, சீ, ஞீ, ணீ, தீ, நீ, பீ, மீ, யீ, ரீ, லீ, வீ, ழீ, ளீ, றீ, னீ
கீழ் விலங்கு: கு, டு, மு, ரு, ழு, ளு
கீழ்விலங்குச்சுழி: டூ, மூ, ரூ, ழூ, ளூ
பின்வளை கீற்று: கூ
இறங்கு கீற்று: ஙு, சு, பு, யு, வு
இறங்குகீற்றுச்சுழி: ஙூ, சூ, பூ, யூ, வூ
ஏறுகீற்று: ஞு, ணு, து, நு, லு, று, னு
ஏறுகீற்றுக்கால்: ஞூ, ணூ, தூ, நூ, லூ, றூ, னூ
ஓர்க்கொம்பு: கெ, ஙெ, செ, ஞெ, டெ, ணெ, தெ, நெ, பெ, மெ, யெ, ரெ, லெ, வெ, ழெ, ளெ, றெ, னெ
ஈர்க்கொம்பு: கே, ஙே, சே, ஞே, டே, ணே, தே, நே, பே, மே, யே, ரே, லே, வே, ழே, ளே, றே, னே
சங்கிலிக்கொம்பு: கை, ஙை, சை, ஞை, டை, ணை, தை, நை, பை, மை, யை, ரை, லை, வை, ழை, ளை, றை, னை
ஓர்க்கொம்புகால்: கொ, ஙொ, சொ, ஞொ, டொ, ணொ, தொ, நொ, பொ, மொ, யொ, ரொ, லொ, வொ, ழொ, ளொ, றொ,னொ
ஈர்க்கொம்புகால்: கோ, ஙோ, சோ, ஞோ, டோ, ணோ, தோ, நோ, போ, மோ, யோ, ரோ, லோ, வோ, ழோ, ளோ, றோ,னோ
இணைக்கால்: ள (ஊ)
ஓர்க்கொம்பு இணைக்கால்: கௌ, ஙௌ, சௌ, ஞௌ, டௌ, ணௌ, தௌ, நௌ, பௌ, மௌ, யௌ, ரை, லௌ, வௌ, ழௌ, ளௌ, றௌ, னௌ

# இந்தச் சொல்லுக்கு ஏன் இந்தப் பொருள் ?
## (வேர்ச்சொல் துணுக்கு விளக்கம்)


**இரா. திருமாவளவன்**
தேசியத் தலைவர்,
மலேசியத் தமிழ்நெறிக் கழகம், மலேசியா




1. **அம்மான்**> மாமன் >அம்மா அல்லது அம்மையின் உடன் பிறந்தவர்
2. **அத்தை** > அத்தன் அப்பா/ தந்தை >> தந்தையின் உடன்பிறந்தவள் ( அம்மை > அம்மான்/ அத்தன்> அத்தை)
3. **மருமகன்**> குடும்பத்திற்குப் பொருந்திய மகன் ( மருவிய மகன்) மகளின் கணவன்
4. **மருமகள்**> குடும்பத்திற்குப் பொருந்திய மகள் ( மருவிய மகள் ) >> மகனின் மனைவி
5. **மாமன்** > மருவிய அம்மான்
6. **மாமி** > மாமன் மனைவி
7. **அண்ணன்** > தமக்கும் மேலான அகவையுடைய உடன் பிறந்தான். அண் = மேல்
8. **தம்பி** = தமக்குப் பின்னால் பிறந்தவன் >> தம் பின்> தம்பின்> தம்பி
9. **தங்கை** > தம் பின் பிறந்த சிறியவள், இளைவள் ( கை = சிறிய) >>> தம் + கை = தங்கை
10. **தா** > கையை முன்னே தள்ளி, நீட்டிப் பெறுவது / கொடுப்பது( முன் தள்ளல் பொருள்)
11. **மா** = பெரிய , உல்> முல்> மல் = திரட்சிப் பொருள், திரண்டது பருக்கும். உல்> முல்> முழு > முகு > மிகு, முகு> மகு > மகம்= பருமை , மகம் >மக> மா, ( மகன்> மான் எனத் திரிதல் போல்) மா = பெருமை, பருமை
12. **மாரி** > கரிய மழை முகிலிலிருந்து பொழியும் மழை ( உல் = கருமை பொருள் வேர். உல்>முல்>மல்>மால்= கரிய முகில், மால்>மார்> மாரி)
13. **மயிர்** > கரிய தலை முடி ( உல்>முல்>மல்>மய்>மை = கண்ணுக்குப் பூசும் கருமை நிறம்; மய்>மயிர் )
14. **அயிர்** > நுண்ணிய மணல் ( உல்>அல்= நுண்மைப் பொருள் வேர். உல்>அல்>அய்>அயிர் )
15. **நிலா** > ஒளி வீசும் துணைக்கோள் ( உல்>நுல்= ஒளிப் பொருள் வேர். உல்>நுல்> நில்>நிலா, நில்>நிலவு )
16. **காரி** >கரிய படலம் சூழ்ந்த கோள். ( உல்>குல்= கருமைப் பொருள் வேர். உல்>குல்>கல்>கர்>கரி>காரி. < கல்>கலி>சனி ~ வடமொழித் திரிபு)
17. **கரி** > கரிய நிற யானை ( உல்>குல்>கல்>கரி)
18. **சாவு** > உயிரற்று உடல் சாய்தல் நிலை. ( உல்>சுல்= வளைவு பொருள் வேர். உல்>சுல்>சல்> சால்>சாய்>சாய்வு>சாவு. சாவு >சா= இறப்பு)
19. **சூரியன்**> சுரீர் எனக் குத்தும் வெப்ப ஒளி வீசும் கோள். உல்>சுல்>சுர்>சுரீர். சுர்>சூர்>சூரி> சூரியன்)
20. **பூனை** > கால்களால் அடிக்கடி தன் முகத்தைத் துடைத்துத் தூய்மைப்படுத்தும் விலங்கு. ( பூசு>பூசை > பூனை. )
21. **உழவு**> நிலத்தைக் குத்திக் கிளறி பயிர் செய்தல் (உல்> துளைத்தல் பொருள் வேர். உல்>உழ்>உழு>உழவு)
22. **வா**> சென்று மீண்டும் திரும்புகை. அள்>வள்= வளைதல் கருத்து வேர். வள்>வர்>வரு> வருகை. வள்>வர்>வார்> வா = வளைந்து வருதல்)
23. **முள்ளம் பழம்**> முள் நிறைந்த பழம். ~ டுரியான். ( உல்= கூர்மைப் பொருள் வேர். உல்>முல்>முள்>முள்+அம்= முள்ளம்)
24. **புரை** > துளை, உல்= துளைத்தல் கருத்து, உல்>புல்> புர்>புரை ( புரை bore)

25. புல்> மூங்கில் ( உள்ளே துளை உள்ளது) உல்> புல்=>துளை
26. புல்லாங்குழல்> புல் + ஆம் + குழல்= மூங்கிலால் செய்யப்பட்ட குழல்
27. குழல்> உள் துளையுடைய தூம்பு. உல்>குல்> துளைத்தல் பொருள் வேர். குல்> குழ்>குழல்
28. தூம்பு> உள் துளையுடைய குழாய். உல்>துள்>தும்>தும்பு>தூம்பு( tube)
29. சுழியம்> வெறுமை வட்ட அடையாளம்; zero, உல்>சுல்= வளைவுப் பொருள் வேர், சுல்>சுழ்>சுழி>சுழியம்
30. சிவம்> சிவப்பு நிற இயற்கைத் தீயின் நிறத்தன்மை, உல்> வெப்பக் கருத்து வேர், உல்>சுல்> செல்>செம்>செம்மை>செவ்வை>செவ்வம்>சிவ்வம்>சிவம்
31. சிவப்பு> தீயின் நிறம், சுல்>செல்>செம்>செம்மை> செவ்வை> சிவ்வை>சிவம்>சிவப்பு.
32. சிவப்பு>சிகப்பு ( வ> க திரிபு முறை)
33. சேய்> செந்நிறம், சுல்>செல்>சேல்>சேய்
34. சேயோன்> செந்நிறக் கதிரவன், சுல்>செல்>சேல்>சேய்> சேயோன்
35. சொலிப்பு> ஒளிர் விடுதல், சுல்>சொல்>சொலிப்பு
36. முருகன் > இளமை வடிவினன். உல்> தோன்றல் கருத்து வேர். தோன்றுவது இளமையாகி இளமைக் கருத்தைத் தரும். உல்>முல்>முள்>முரு>முருகு= இளமை. முருகு>முருகன் = இளமையன்
37. குமரன்> இளமையானவன். உல்>கும்>குமரன். (கும்= திரட்சிப் பொருள் வேர். இளமையானது வலிவுடையதாய் விளங்கும்)
38. குமரி > உருண்டு திரண்டு வலிவுற்று விளங்கும் இளம்பெண். உல்>குல்>கும்>குமரி.
39. உயரம் > மேல் நோக்கி முன் இயங்கியிருப்பது. உல்> முன்செலல் கருத்து வேர். உல்>உய்>உயர்>உயரம்.
40. உயிர்> முன்னோக்கி உந்தி இயங்கிக்கொண்டிருப்பது. உல்>உய்>உயிர். உயிருடைய ஒன்று இயங்கும் வளரும்.
41. காளான்> கரிய நிறமுடைய பூக்காத் திணை. உல்>கல்= கருமை கருத்து வேர். உல்>குல்>கல்>கள்>காள்>காளான்
42. காளி> வெப்பம் மிகுந்த கரிய வறண்ட பாலைத் திணை இயற்கைத் தன்மை. உல்>குள்>கள்>காள்>காளி.
43. அந்தணன்> அகத்தைத் தணித்தவன். ஆசை வெறிகொண்டலையாது அடங்கி இருப்பவர். அகம் + தணன்> அம்+ தணன் = அந்தணன். அகம்> அம்.
44. ஆல மரம் > அகன்று விரிந்த மரம். அகல்> ஆல். அகலம்>ஆலம். அகல மரம் > ஆல மரம்.
45. தென்னை மரம்> வளைந்த மரம். உல்> துள்> வளைவு பொருள் வேர். உல்>துல்>தெல்> தென்> தென்னு = வளைவு . தென்>தென்னை= ஓங்கி உயர்ந்து வளைந்த மரம்
46. மேற்கு > மேல் நோக்கிய மலையுள்ள திசை. உல்>முல்>மேல்> மேற்கு.
47. கிழக்கு> மேற்கின் எதிர்புறமாய் கீழ்நோக்கிய திசை. உல்>குல்> தாழ்வு, படுப்பு பொருள் வேர். உல்>குல்>கீழ்>கீழ்க்கு> கிழக்கு.
48. மண்> சேர்ந்திருப்பது. உல் = சேர்தல் கருத்து வேர். உல்>முல்>முள்>முண்>மண்.
49. மணம்> பொருந்திய, இசைந்த வாசனை, இரு உள்ளங்கள் பொருந்திய கலியாணம். திருமணம். உல்>முள்>முண்>மண்.
50. கலகம்> எதிரிகள் சேர்ந்து பொருதுவது. கைகலப்பது. உல்> சேர்தல் கருத்து வேர். உல்>குல்>கல்>கலவு> கலகம்
51. கலாம்> கலகம். உல்>குல்>கல்>கலாம்
52. போர்> இரு நாடுகள் சேர்ந்து பொருதுவது. உல்>புல்>பொல்> பொர்> போர் ( war)
53. களவு> மறைந்து செய்யும் திருட்டு. உல்> குல்> குள்>கள்= கருமைக் கருத்து வேர். கருமை> இருட்டு. இருட்டில் ஒளி இல்லாததால் உரு மறையும். இவ்வாறு உருமறைந்து யாருக்கும் தெரியாமல் செய்யும் திருட்டு. குள்>கள்>களவு.
54. கள்ளம்> உள்ளத்துள் மறைவாய்க் கிடக்கும் தீய உணர்வு. உல்> குல்>குள்>கள்>கள்ளம்.

55. கரவு > கரிய நிறம் மறைவுணர்வுக்குக் குறியீடாகி மறைவான தீய எண்ணத்திற்கு ஆகி வந்து கரவானது. கரவு> மறைவான தீய எண்ணம். உல்>குல்>கல்>கர்>கரி> கரவு

56. காயம்> கரியதான வானம். உல்>குல்>கல்>கய்>காய்>காயம். ( ஆகாயம்> ஆகாசம் (வடமொழி)

57. வெப்பம் > சூடு. சூரிய ஒளி வெண்மை நிறமாகவும் இருத்தலால் வெள்ளை சூட்டுக்கும் ஆகி வந்தது. உல்> முல்>மில்> விள்> வெள்> வெய்> வெய்ம்மை> வெம்மை. வெம்பு>வெப்பு> வெப்பம்.

58. கரம்>கடும் வெயிலில் உழவுத் தொழில் செய்தமையால் கருத்த கை. உல்>குல்>கல்>கர்>கரம்

59. குளம்> நிலத்தில் குடைவாய்க் கிடக்கும் தாழ்பகுதியில் தேங்கும் நீர் நிலை. உல்> துளைத்தல் கருத்து வேர். உல்>குல்>குள்> குளம்

60. அடுப்பு > சமையல் செய்வதற்கு உணவைச் சூடேற்றும் கருவி. உல்> சேர்தல், தொடுதல், பொருந்துதல் கருத்து வேர். சேர்வது தேயும் தேய்வது சூடேறும் சூடேறியது தீயாகும், குத்தும் எரிக்கும் ; கருக்கும். உல்> அல்> அள் = கூர்மை, வெப்பக் கிளைக் கருத்து. அள்> அட்டு= வெப்பம். அள்>அடு = சேர்தல், மோதல், >> மோதுவது வெப்பமாவதால் வெப்பப் பொருளுமாகியது. அள்> அடு = அடுப்பு .

61. அட்டை = சேர்ந்து அடுக்கப்பட்டுத் திண்மையாகிய தாள். உடலில் ஒட்டி குருதி உறிஞ்சும் உயிரி. உல்= சேர்தல் கருத்து வேர், உல்> அல்>அள்> அடு > அட்டு > அட்டை.

62. பசை > ஒட்டி இரு பொருள்களைச் சேரச்செய்யும் பொருள். உல்> சேர்தல், பொருந்தல் கருத்து வேர். உல்> புல்= சேர்தல், பொருந்துதல் ; உல்>புல்>பல்> பய்> பயை>பசை.

63. பற்று > சேர்தல், ஒட்டுதல். தொற்றுதல்; உல்>புல்>பல்> பற்று ( பற்று > பற்றி> பத்தி)

64. பல்லி> சுவரில், நிலத்தில் பற்றி நகரும் உயிரி. உல்> புல்>பல்> பல்லி

65. உடை > உடலில் ஒட்டி ஏற்றவாறு பொருந்த அணியும் ஆடை. உல்> சேர்தல் கருத்து வேர். உல்> உள்> உடு> உடை.

66. உடுப்பு > உல் = சேர்தல் கருத்து வேர். உல்>உள்> உடு> உடுப்பு

67. உடும்பு > சுவரை உறுதியாய்ப் பற்றிப் பிடித்து நகரும் உயிரி. உல்> உடு> உடும்பு

68. ஊர்> மக்கள் சேர்ந்து பொருந்தி வாழும் இடம். உல்> உர்> ஊர்.

69. ஊர்வன> நிலத்தோடு பொருந்தி ஒட்டி நகரும் உயிரிகள். உல்> உர்> ஊர்> ஊர்வன.

70. உறைவிடம்> மக்கள் சேர்ந்து பொருந்தி வாழும் இடம். உல்> உர்> உறு > உறை > உறைவு > உறைவு இடம் > உறைவிடம்

71. உறவு > பொருந்திய சேர்ந்த ஒட்டிய தொடர்பு. உல்> உர்> உறு > உறவு

72. உறவினர் > ஒட்டிய தொடர்பினர். உல்> உறு>உறவு>உறவினர்

73. தொடர்பு > ஒட்டிச் சேர்ந்திருக்கும் உறவு. உல்> துல்> துள்> தொள்> தொடு > தொடர்> தொடர்பு

74. தொடரி > ஒட்டிச் சேர்ந்து நீட்சிபடும் பொருள். ( சங்கிலி) உல்> துல்> துள்>தொள்> தொடர்> தொடரி

75. தொடை > இடுப்போடு காலைச் சேர்த்துத் தொடுத்திருப்பது/ பாக்களில் சீர்களையும் அடிகளையும் இணைப்பது. உல்> துள்>தொள்> தொடு>தொடை

76. தொடுப்பு > கள்ள உறவு / தொடர்பு . உல்> தொள்> தொடு > தொடுப்பு

77. தொடலை > பூக்களால் இணைக்கப்பெற்ற மாலை. உல்> தொள்> தொடு > தொடல்> தொடலை

78. நடு > உள்ளே அளவாய்ப் பொதிந்த பகுதி/ புள்ளி. உல் > துளைத்தல் கருத்து. உல்> உள்> நுள்> நள்> நடு.

79. நள்ளிரவு > நடு இரவு ( இரவு 12 மணி) உல்>துளைத்தல் கருத்து. உல்> உள்> நுள்>நள்= நடு. நள்> நள்ளிரவு

80. நண்பகல்> நடுப்பகல். உல்>துளைத்தல் கருத்து. உல்> நுள்> நள்> நண்பகல்.

81. உள்ளங்கை = கையின் உட்பகுதியாய் விளங்கும் நடுப்பகுதி.

உல்>துளைத்தல் கருத்து     உல்> உள்>உள்ளம்> உள்ளங்கை.

82. அகம்> உட்குடைவாய் உள்ள வீடு. உள் பொதிந்த உள்ளம்.
உல்> அல்>அகு> அகம். நடுவிடம்.

83. அங்கை>உள்ளங்கை.அகம் = உள்பொதிந்ததால் அளவுற்று நடுவிடமானது. உல்> அல்>அகு>அகம்> அகம் கை> அகங்கை> அகம்>> அம் எனத் திரிந்து அங்கை ஆனது.

84. நயன்> நடுவானத் தன்மை. நயன்மை. உல்>நுல்>நல்> நய்> நயன். ( நயன்> நயம்> நியம்> நியாயம்> ஞாயம்>> வடமொழி) நயன்> நயன்மை ( தமிழ்) நியாயம்/ ஞாயம் ( வடத்திரிபு)

85. பேய்> பே எனும் அச்சக் குறிப்பு. பேபே.. என விழித்தல். அச்சத்தால் ஆக்கிக் கொண்ட உருவகம். பே>பேய்

86. பேதை> பே அச்சக் குறிப்பு. பே> பேது= அறியாமை, பே>பேது>பேதை = அறியாமை உடையவர்.

87. பேதலிப்பு > அறியாமையாலும் அச்சத்தாலும் நிலைத் தடுமாறல். பே> பேது > பேதலிப்பு

88. பேக்கு> பே= அச்சக் குறிப்பு. அச்சத்தால் அறியாமை உண்டாகும். அத்தகு அறியாமை பேக்கு என்னப்பட்டது.

89. பேக்கான் > பே>பேக்கு> பேக்கான். அச்சத்தின் நிமித்தமாய் அறியாமையுற்று அறிவு முடமான ஆள்

90. பேமானி> பே>பேமானி அறிவு குன்றிய மாந்தன். பே = அச்சக் குறிப்பு.

91. அரத்தம்> சிவப்பு நிறத்திலான குருதி. உல்> சேர்தல் கருத்து வேர். சேர்ந்தது உராசும், குத்தும், துளைக்கும். வெப்பம் உருவாகுதற்கு இவ்வினை இன்றியமையாதது. இதனால் உல்> எரிதல் கருத்தாகியது. உல்>அல்>அர்= எரிவது செந்நிறமாதலால் சிவப்பு நிறக் கருத்தாயிற்று. அர்>அரம்> சிவப்பு நிறம். அர்>அரம்> அரத்தம் = சிவப்பு நிறக் குருதி.

92. அரம்பம்> அறுக்கும் கருவி. உல்> துளைத்தல் கருத்து வேர். உல்>உர்>அர் = துளைப்பது பொருள்களை வெட்டும், பகுக்கும், துளையிடும். அர் > பொருள்களை வெட்டும் கருத்துக் கிளைக் கருத்து வேர். அர்> அரம் = பொருள்களை அராவி வெட்டும், தீட்டும் கருவி. அர்>அரம்>அரம்பம் = பொருள்களை அறுக்கும் கருவி.

93. அரிமா = கூரிய நகங்களாலும் பற்களாலும் ஏனைய உயிரினங்களைக் குத்திக் குதறிக் கொல்லும் விலங்கு. உல் > துளைத்தல் கருத்து வேர். உல்> உர்>அர்> அரி > அரிமா

94. அரன் > செந்நிறமான சிவன். உல்= எரிதல் கருத்து வேர். எரிவது சிவக்கும். சிவந்தவன் சிவன். உல்>உர்>அர் > செந்நிறக் கருத்து. அர்> அரன் = செந்நிறமான சிவன்.

95. உடன்> சேர்ந்திருத்தல், இணைந்திருத்தல் பொருளைத் தரும் வேற்றுமை உருபு. உல் > சேர்தல் கருத்து வேர். உல்> உள் > உடு> உடன்.

96. ஓடு > இணைந்திருத்தல் வேற்றுமை உருபு. உள்>சேர்தல் , பொருந்துதல் கருத்து வேர். உல்> உள்> ஒள்> ஒடு> ஓடு.

97. கண்> பக்கம், இடம், நெருங்கல் எனும் பொருள் தரும் வேற்றுமை உருபு. உல்> கூடல், நெருங்கல் கருத்து வேர். உல்> குல்> குள்> கள்> கண் . "அவன்கண் கொடு"

98. பால்> பக்கம் எனும் பொருளை உணர்த்தும் சொல் . வேற்றுமை உருபு. உல்> பொருந்துதல், நெருங்கல், சேர்தல், துளைத்தல் கருத்து வேர். உல்>புல்> துளைத்தல் கருத்து. புல்> புகு> பகு>பகல்> பால் = பகுப்பு. பகுக்கப் பட்டது பகுதியாகும். ஒன்றாக இருந்தது பகுக்கப்பட்டதாயினும் அருகே இருப்பதால் பக்கம், அருகு எனும் பொருளைத் தந்தது. அவன் பால் கொடு  எனின் அவனிடத்து நெருங்கிக் கொடு எனவாகும்.

99. ஐ > பக்கம், சேர்தல், உயர்வு, நுட்பம் முதலானப் பொருளைத் தரும். இரண்டாம் வேற்றுமை உருபு. உல்> அல் = நெருங்கல் கருத்து வேர். உல்>அல்>அய்> ஐ = சார்ந்த பொருள் தரும் வேற்றுமை உருபு. "மரத்தை வெட்டினான்".
( மரத்தைச் சார்ந்தால்தான் , பொருந்தினால்தான் வெட்ட முடியும்.)

100. கு = சேர்தல் பொருள் நான்காம் வேற்றுமை உருபு. உல்> குல் = சேர்தல், பொருந்துதல், நெருங்கல். உல்>குல்> கு... ஈறு மறைந்து வேற்றுமை உருபானது. வீட்டுக்குச் சென்றான்.

# உவரி



முனைவர் ஆ. அரிமாப் பாமகன்
மேனாள் ஆங்கில விரிவுரையாளர்
புதுச்சேரி

"ஆசை அதிகம் வச்சு...
மனச அடக்கி வைக்கலாமா என் மாமா...
ஆள மயக்கிப்புட்டு...
அழக ஒளிச்சி வைக்கலாமா என் மாமா...

புது ரோசா நான் என்னோடு...
என் ராசாவே வந்தாடு என் செல்லக்குட்டி..."
(ரவி பாரதி, மறுபடியும்).

*****

'உகப்பே உயர்தல் உவப்பே உவகை'
(தொல்காப்பியம், உரியியல் 8).

"நகையும் உவகையும் கொல்லும் சினத்தின்
பகையும் உளவோ பிற."
(திருக்குறள் 304).

* நகை – முகத்தில் தோன்றுவது, உவகை – உள்ளத்தில் தோன்றுவது, மகிழ்ச்சிப் பெருக்கு.

உவட்டு = பெருக்கு,
"இருகவுள் கவிழ்த்த மதநதி உவட்டின்
வண்டுஇனம் புரளும் வயங்குபுகர் முகத்த"
(கல்லாடம் 1, 1:3–4).

உவட்டெடுத்தல் = பெருக்கெடுத்தல்,
"குவட்டு மத்தகத் தோட்டி குளிர்பிறை
கொளஆங்கண்
உவட்டெ டுத்தொழுகு அருவி யொழுகுகை
அறைபுளகம்"
(கச்சியப்ப முனிவரர், தணிகைப்புராணம், வீராட்டகாசப் படலம் 76: 1–2).

உம், உம்முதல் = உயர்தல்.
உம் – உப்பு, உப்புதல்.
உப்பிவருதல் = உயர்தல், எழுச்சி பெறுதல்.

உப்பு = கடல்நீர் சுவறச் சுவறப் பாத்திகளில் உப்பிவருதலால் கிடைப்பது.
உப்பு = உப்பளம்.
உப்பு > உம்பு > உப்பளம், உமண், உமணர்.
"உம்பளம் தழீஇய வுயர்மணல் நெடுங்கோட்டு"
(மணிமேகலை 24: 27).

உப்புத் தொழிலில் ஈடுபடுவோர் உமணன் – உமணத்தி.
"முரம்புதலை மணந்த நிரம்பா இயவின்
ஓங்கித் தோன்றும் உமண்பொலி சிறுகுடி"
(வன்பரணர், நற்றிணை 374 : 1–2).
உமண் = உமணர், உப்பு வணிகர்.

"சில்பத உணவின் கொள்ளை சாற்றிப்
பல்எருத்து உமணர் பதிபோகு நெடு நெறி"
(பெரும்பாணாற்றுப்படை: 64–65).

"உப்புஒய் சாகாட்டு உமணர் காட்டக்
கழிமுரி குன்றத்து அற்றே,
எள்அமைவு இன்று,அவன் உள்ளிய பொருளே."
(மாங்குடி மருதனார், புறநானூறு 313: 5–7).
உரை: உமணர் உப்பேற்றிச் சென்ற வண்டி குன்றத்தில் ஏறும்போது அதன் அச்சு முரிந்துவிட்டால் எதுவும் பயன்படாமல் போவது போன்று ஏளனத்துக்கு உரியது அன்று அவன் ஈட்டிக்கொணர்ந்து நல்கும் கொடைப்பொருள். (பெரிதும் போற்றுதலுக்கு உரியது).
* எள் அமைவு = எள்ளுதற்கு உரியது.

உவ – உவர் – உவர்ப்பு = உப்புச் சுவை, அறுசுவைகளுள் ஒன்று.

உவர்மண் = துணிவெளுக்கப் பயன்படும்

உப்புக்கலந்த மண். இது வண்ணார் வெள்ளாவி வைக்கப் பயன்படும்.
உவர் – உவர்க்காரம் > சவர்க்காரம், சவட்டுமண், சவட்டுப்பு, சவட்டுமண்ணுப்பு.
சவட்டுநிலம் = உவர்நிலம்.

உம் – உவ = உயர்தல், மிகுதியாதல்.
உவ = மிகுதி
உவகை = மிகையான மகிழ்ச்சி.
உவப்பு = மிகுந்த மகிழ்ச்சி.
உவ > உவவு = உவப்பு.

உவவு = நிறைய,
"இவரிதழ்த் தூர்வையை இட்டு நேர்துலை
உவவுபொன் றருகென உவப்பின் ஓதினான்."
(கச்சியப்ப முனிவரர், விநாயகபுராணம், 54 தூர்வை துலையேற்று படலம் 12: 3–4).

"உவவுமதி உருவின் ஓங்கல் வெண்குடை
நிலவுக்கடல் வரைப்பின் மண்ணகம் நிழற்ற,
ஏம முரசம் இழுமென முழங்க,
நேமி யுய்த்த நேஎ நெஞ்சின்,
தவிரா ஈகைக், கவுரியர் மருக!"
(இரும்பிடர்த் தலையார், புறநானூறு 3:1–5).
உரை: நீ கவுரியர் மரபில் வந்தவன்.
உன் மரபினர் முழுமதி போல் உருவம் கொண்ட வெண்கொற்றக் குடைநிழலில் இருந்துகொண்டு நாடாண்டு மண்ணிலுள்ள அனைத்து மக்களுக்கும் நிழல் தந்தவர்கள். முரசு முழக்கத்துடன் ஆட்சிச் சக்கரத்தை உருட்டியவர்கள். நெஞ்சில் நேயம் கொண்டு இல்லை என்று சொல்லாமல் கொடை வழங்கியவர்கள்.நீ கற்புக்கரசியின் கணவன். உன்னைக் கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி என்பார்கள்.
* உவவுமதி = முழுமதி.

உவ > உவா, உவாமதி = நிறைவு, முழுமை, நிறைமதி.
"உள்ளுறப் புகுந்து உவாமதி உடலுரிஞ்சுதலால்
பிள்ளை வெண்மதி யாதல் நன்றெனப்
பெரிதுவக்கும்."
(நைடதம், நகரப் படலம் 8: 3–4).

உவரி = உப்புத் தன்மை பெற்ற கடல், மிகுந்த – பெரிய நீர்ப்பரப்பு.

"ஒலித்தக்கால் என் ஆம் உவரி எலிப்பகை
நாகம் உயிர்ப்பக் கெடும்."
(திருக்குறள் 763).
உரை: எலியாகிய பகைகூடிக் கடல் போல் ஒலித்தாலும் என்ன தீங்கு ஏற்படும், பாம்பு மூச்சு விட்ட அளவில் அவை கெட்டழியும்.

உவரி = உப்பு நீர்,
"கடல்சார்ந்தும் இன்னீர் பிறக்கும், மலைசார்ந்தும்
உப்புண்டு உவரி பிறத்தலால் தத்தம்
இனத்தனையர் அல்லர் எறிகடல்தண் சேர்ப்ப!
மனத்தனையர் மக்கள்என் பார்."
(நாலடியார் 245).

பொருள்: உப்புநீர் கொண்ட கடலை அடுத்த மண்ணில் பருகுவதற்கு இனிமையான நீரும் ஊறும்.
மலையை அடுத்த மண்ணில்
உப்பு நீரும் ஊறும். இது நீரின் தன்மை. சார்வின் தன்மை அன்று.
அதுபோல,மக்கள் இனத்தின் தன்மை உடையவர் அல்லர். அவரவர் மனத்தின் தன்மையர்.

வ > ப.
உவரி > உபரி.
உவரி காணுதல் = மிகுதியாக வருதல்.
'குண்டுமிளகாயில் அரைத்துப்பார், நீட்டு மிளகாயை விடத் தூள் உவரி காணும்' என்பர் மகளிர்.

'அணையிலிருந்து உவரி(உபரி) நீர் வெளியேற்றம்' எனச் செய்தி வரும்.

"மரகதமணிப் பசும்காய் கொள்வான் குலை
கவர்பழுக்காய்க் குலை கனியக் காஉறீஇ
இவர்தரு மெல்இலைக் காவும் ஏந்திய
உவரியாய்ச் சொரிந்து இடம் பெறாது தான்
ஓர்பால்."
(சீவகசிந்தாமணி 826).
பொருள் : மரகத மணிபோலும் பசுங் காய்களைக் கொண்ட குலையும், விரும்பத்தக்க பழுக்காய்க் குலையும், முற்றிலும் காவடியிலே கொண்டு வந்து, பரப்பி வைத்திருக்கும் வெற்றிலைப் படலிகையும், (சுமந்து வந்து) சொரிந்திடுதலால் உயர்ந்த வெள்ளமாகி ஒரு பக்கந்தான் இடம் பெறாது.

* உவரி = வெள்ளம், மிகுதி.

"வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ்
சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல்
இனிப்பதுவே!"

(வள்ளலார், திருவருட்பா,
ஆளுடையவடிகள் அருள்மாலை 3).

உணவின் அளவு, ஒன்றன் சுவை அதிகமானால்
உவட்டும், தெவிட்டும்.
தெவிட்டும் > திகட்டும்.
உவட்டும் > உமட்டும் (vomit).

விளைச்சல் அதிகமாக இருக்கும் என்பதைத் தஞ்சை மாவட்ட வேளாண் மக்கள், "இந்த ஆண்டு கண்டுமுதல் உவரியாக இருக்கும்" எனக் கூறுவர்.

உவ > உவரி > உபரி > *uper > over!
over (prep., adv.)
Old English ofer "beyond; above, in place or position higher than; upon; in; across, past; more than; on high," from Proto-Germanic *uberi (source also of Old Saxon obar, Old Frisian over, Old Norse yfir, Old High German ubar, German über, Gothic ufar "over, above"), from PIE root *uper "over."

over-
word-forming element meaning variously "above; highest; across; higher in power or authority; too much; above normal; outer; beyond in time, too long," from Old English ofer (from PIE root *uper "over"). Over and its Germanic relations were widely used as prefixes, and sometimes could be used with negative force. This is rare in Modern English, but compare Gothic ufarmunnon "to forget," ufar-swaran "to swear falsely;" Old English ofercræft "fraud."
overabundance (n.)
also over-abundance, late 14c., overaboundaunce, "excess, superabundance," from over- + abundance. Middle English had also a verb, overabounden (late 14c.) "be very abundant; be too numerous or plentiful."

## பொருள்களின் சிறப்பியல்பறிதல்

ஒவ்வொரு பொருளின் (பார்த்தமட்டிற் கண்ணைக் கவரும்) சிறப்பியல்பையும் உற்றுநோக்கியே, அதததற்குரிய பெயரை இட்டிருக்கின்றனர் முன்னைத் தமிழர்.
எ.டு. : காகா (காக்கா) என்று கரைவது காகம் (காக்கை).
மூன்று அணிகளை (வரிகளை) முதுகில் உடையது அணில்.
இருமை (கருமை)யான மாட்டினம் எருமை.
வழுவழுவென்றிருக்கும் மரம் வாழை.
முடிவேய்ந்த பேரரசன் வேந்தன்.
வேய்தல் = முடியணிதல்.
வேய்ந்தோன் – வேந்தன்.
கொன்றை வேய்ந்தானை (சிவனைக்) கொன்றை வேந்தன் என்று கூறுதல் காண்க.
சேர சோழ பாண்டி முக்குடியரசர்க்கே முடியணியும் உரிமை முற்காலத்திலிருந்தது.

– மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்
(மொழியாராய்ச்சிக் கட்டுரைகள்)



# இரண்டாம் குறட்பாவின் தொடர்ப் பொருண்மை

பேரா. முனைவர் ப. கொழந்தசாமி,
அரசினர் ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

உயர்தனிச் செம்மொழியான தமிழ் இலக்கிய வழக்கும் பேச்சுப் பயில்வும் கொண்ட இரட்டை வழக்கினதாகும். பொருளுணர்தலில் இவ் இரண்டிலும் தொடர்கள் அடிப்படை அலகுகளாக இயல்கின்றன. செறிவான மொழிநடை கொண்ட இலக்கியத்தில் புலமை வெளிப்பாடாகவும் யாப்பு முதலிய கட்டுப்பாடுகளாலும் சீதையைக் கண்டேன் என்னும் பொதுவான அமைப்பிலிருந்து தொடர்கள் மாறிக் கண்டேன் சீதையை என்றும் அமைவதுண்டு. இதனால் தொடர்ப் பொருண்மை சிதையாது; ஆனால் நடைப் பொருண்மை மாறுபடும்; ஒரு தொடரில் எதை முதலில் சுட்டி அழுத்தம் கொடுக்கப்படுகின்றது? என்பது புலனாகும்.

குறள் வெண்பாவில் இயல்கின்ற வள்ளுவத்தில் ஒரு குறட்பாவைத் தெளிவாகக் கருத்தறிய அது எவ் அதிகாரத்தில் உள்ளது? அதில் எத்தனை தொடர்கள் உள்ளன? ஒவ்வொரு தொடரிலும் உறுப்புச் சொற்கள் அனைத்தும் உள்ளனவா? பொதுத் தொடரமைப்பு மாறியுள்ளதா? தொகை உள்ளதா ? என்று நோக்கலாம். சான்றாக, கடவுள் வாழ்த்து அதிகாரத்திலுள்ள இரண்டாம் குறட்பாவை நோக்கலாம்:

கற்றதனால் ஆய பயனென்கொல்? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின் (குறள் 02)

இதில் ஒரு நிபந்தனைத் தொடரும், ஒரு வினாத் தொடரும் கொண்ட கலவை வாக்கியம் முன்பின் மாறியமைந்துள்ளது. நிபந்தனைத் தொடரை முதலில் அமைத்து, கற்றோர் என்பதை அதன் தோன்றா எழுவாயாக அமைத்து, தொடரமைப்பை முறைப்படுத்தலாம்.

அடுத்து, கற்றதனால் ஆய பயனென்கொல்? என்னும் வினாத்தொடரிலுள்ள குறை உறுப்புச் சொற்களை ஆகிய, எவன் [என்ன] என்று நிறைவாக்கி, கொல் என்னும் இடைச்சொல் பொருளழுத்தம் நல்குவதை அறியலாம். இதிலுள்ள வினா எதிர்மறை எச்சமாக அமைந்து இன்மைக் கருத்தைக் கொண்டிருப்பதைத் தெளியலாம். வாலறிவன் என்னும் கூட்டுச்சொல் பண்புப்பெயராக அறிவாளரையும் திறனாளரையும் சுட்டுவதைத் தெளியலாம். வாலறிவன் நற்றாள் என்னும் சேர்க்கையில் கிழமைப் பொருள் ஆறாம் வேற்றுமைத் தொகை அமைந்துள்ளதை அறியலாம். அப்போது அறிவையும் திறமையையும் போற்றுதலே, கற்ற கல்வியின் பயனாகும் ; கற்றோர் அறிவாக்கத்தையும் திறன் மேம்பாட்டையும் ஊக்கவேண்டும் என்னும் மானுட மேம்பாட்டு இயல்நெறி இங்கு வலியுறுத்தப்படுவது புரியும். ஆயினும் உரையாசிரியர்கள் இக் குறட்பாவுக்குத் தொன்மவியல் நோக்கில் உரை எழுதியுள்ளனர்.

இவ்வாறு தொடர்ப் பொருண்மை நோக்கில் ஒவ்வொரு குறட்பாவையும் அணுகினால் தெளிவு வாய்ப்பாகும்; பனுவலின் பயன் மிகும் ; மானுடம் வெல்லும்.

நன்றி : இணையத் தரவுகள்

# அகரமுதலி இயக்ககத் தமிழ்க் கலைக்கழகக் கூட்டம்




தமிழ்நாடு அரசு, செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத் தமிழ்க் கலைக்கழகத்தின் 173–174ஆவது கூட்டங்கள் முறையே 2025 சனவரி 24,25 ஆம் நாள்களில் நடைபெற்றன.

இன்றைய அறிவியல் தொழில்நுட்ப உலகில் நாள்தோறும் பெருகிவரும் பல்வேறு துறைசார்ந்த, பிறமொழிச் சொற்களுக்கு இணையான தமிழ்க்கலைச்சொற்களை உடனுக்குடன் வடிவமைத்து, மக்களின் பயன்பாட்டிற்குக் கொண்டுவரும் நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு, தமிழ்நாடு அரசு தமிழ் வளர்ச்சித் துறை செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககத்தின் 'தமிழ்க் கலைக்கழகம்' செயற்பட்டுவருகிறது. மக்களின் பேச்சுவழக்கிலும், ஊடகங்களிலும் காணப்படும் பிறமொழிக் கலைச்சொற்கள் இவ்வியக்ககப் பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர் மற்றும் தொகுப்பாளர்களால் தொகுக்கப்பட்டு, அவற்றிற்கிணையான தமிழ்க் கலைச்சொற்கள் வடிவமைக்கப்படுகின்றன. அச்சொற்கள் திங்கள் இருமுறை நடைபெறும் தமிழ்க் கலைக்கழகக் கூட்டங்களில் சீராக்கம் செய்யப்பட்டு சொற்குவை வலைத்தளத்தில் பதிவேற்றம் செய்யப்படுகின்றன.

இக்கூட்டங்களில் அலுவல்சாரா உறுப்பினர்களான புலவர் வெற்றியழகன், முனைவர் முனைவர் இரா.கு. ஆல்துரை, திரு. அ. மதிவாணன் ஆகியோர் பங்கேற்றனர். மேலும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத் தமிழ்மொழி (ம) மொழியியல் புல உதவிப் பேராசிரியர் முனைவர் நா. சுலோசனா மற்றும் அலுவல்சார் உறுப்பினர்கள் ஆகியோர் பங்கேற்றனர். இவ்விரு கூட்டங்களிலும் மொத்தம் 250 தமிழ்க் கலைச் சொற்களுக்கு வல்லுநர் குழு ஏற்பளித்துள்ளது.

## ஏற்பளிக்கப்பட்ட கலைச்சொற்களுள் சில:

| | |
|---|---|
| Applejuicification | அரத்திச்சாறாக்கல் |
| Bandwidth Connectivity | அலைக்கற்றை இணைப்பு |
| Billionaire tax | பெருஞ்செல்வ வரி |
| Conscious quitting | தெளிந்து பணிவிலகல் |
| Deployed military | படைக்குவிப்பு |
| Funwashing | ஈர்ப்புப் பகடி |
| Health washing | மிகைநல உணவு விற்பனையுத்தி |
| Inchstone | குழந்தை முன்னேற்றப் படி |
| Manchester encoding | எண்மக் குறியாக்கம் |

# அகரமுதலி இயக்ககத்தில் அகப்பயிற்சி! இலயோலா கல்லூரி மாணவர்கள் பயன்!



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்தில் அகப்பயிற்சித் திட்டத்தின்கீழ் (Internship programme), சென்னை இலயோலா கல்லூரித் தமிழ்த்துறை மாணவர்களுக்குத் தூயதமிழ்ப் பயன்பாடு, தமிழ்க் கணியச்சு, கலைச்சொல்லாக்கம், மின் அகராதியின் தேவை, மொழிபெயர்ப்பு உள்ளிட்டவை குறித்துப் பயிற்சியளிக்கப்பட்டது.

18.12.2024 முதல் 13.01.2025 வரை நடைபெற்ற அகப்பயிற்சியில் கலந்துகொண்டு பயன்பெற்ற மாணவர்களுக்குப் பயிற்சியின் நிறைவில் அகரமுதலி இயக்கக இயக்குநர் திருமதி க. பவானி அவர்கள் சான்றிதழ்கள் வழங்கிப் பாராட்டுத் தெரிவித்தார்.

அகப்பயிற்சி நாள்களில், இயக்ககக் கண்காணிப்பாளர் திருமதி ஆ.மு.பிந்து மாணவ – மாணவிகளுக்குத் தமிழ்க் கணியச்சு, கணினி பயன்பாட்டிற்கான அடிப்படைச் செய்திகள் குறித்துப் பயிற்சியளித்தார். பதிப்பாசிரியர்கள் முனைவர் மா. பூங்குன்றன், 'சொற்பிறப்பியல் அகராதி' குறித்தும், முனைவர் தி. பாலசுப்பிரமணியன், 'மொழிபெயர்ப்பு' குறித்தும், திரு. சு. வீரவேலு 'தனித்தமிழ்ப் படைப்புகள்' குறித்தும் பயிற்சியளித்தார்கள்.

பதிப்பாசிரியர்கள் கி. தமிழ்மணி 'கலைச்சொல்லாக்கம்' குறித்த செய்முறை விளக்கமளிக்க, தொகுப்பாளர்கள் முனைவர் வே. கார்த்திக் 'வேர்ச்சொல்லாய்வு' 'படைப்பிலக்கியம்' குறித்தும், திருமதி ஜெ. சாந்தி 'கலைச்சொல்லாக்கம்' குறித்தும் பயிற்சியளித்தனர்.

தொகுப்பாளர்கள் திரு. வே. பிரபு 'சொற்சுவை' குறித்தும், திரு. கி. இராமர் 'அகராதியியல்' குறித்தும், திருமதி கு.சங்கீதா 'தமிழ்நாட்டரசின் தமிழ்வளர்ச்சி அமைப்புகள்' குறித்தும் எடுத்துரைத்தனர்.

செம்மொழித் தமிழ் காப்போம்! செந்தமிழால் பேசுவோம் !

தமிழ்நாடு அரசு
தமிழ்வளர்ச்சித் துறை



# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்





எண்.75, முதல் தளம், நகர் நிருவாக அலுவலக வளாகம்
சாந்தோம் நெடுஞ்சாலை, எம்.ஆர்.சி. நகர்
சென்னை–600 028.


Sorkuvai.tn.gov.in


044–22541209




# அகரமுதலித் தொகுதிகள்

## 35% கழிவு விலையில் நூல் விற்பனை

| தொ. எண். | நூல் பெயர் | விலை ரூ. | கழிவு (35%) ரூ. | விற்பனை விலை ரூ. |
|---|---|---|---|---|
| 1. | இரண்டாம் மடலம் 'கா–கௌ' முதல் எட்டாம் மடலம் 'வெ–வௌ' வரை ( 17 தொகுதிகள் ) | 6000/– | 2100/– | 3900/– |
| 2. | ஒன்பதாம் மடலம் இணைப்பு மடலம் (இரண்டு தொகுதிகள்) | 800/– | 280/– | 520/– |
| 3. | பத்தாம் மடலம் அயற்சொல் மடலம் (மூன்று தொகுதிகள்) | 1200/– | 420/– | 780/– |
| 4. | பதினொன்றாம் மடலம் (தமிழ் அகரமுதலி வரலாறு) | 300/– | 105/– | 195/– |
| 5. | பன்னிரண்டாம் மடலம் (தமிழ்ச் சொற்பிறப்பு நெறிமுறைகள்) | 400/– | 140/– | 260/ |
| 6. | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி சுருக்கப்பதிப்பு | 1000/– | 350/– | 650/– |
| 7. | தமிழ் வினைச்சொல் அகரமுதலி | 500/– | 175/– | 325/– |

**புதிய வெளியீடு**

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**
**திருந்திய பதிப்பு 7 தொகுதிகள்**
**விரைவில் விற்பனைக்கு முன் பதிவு செய்யப்படுகிறது.**

குறிப்பு : தொகையை மொத்தமாக அல்லது வங்கி வரைவோலையாக / காசோலையாக "The Director, Directorate of Tamil Etymological Dictionary Project, Chennai – 600 028" எனும் பெயரில் சென்னையில் மாற்றத்தக்க (Payable at Chennai) வகையில் வழங்கலாம் அல்லது மின்னணு முறையில் வழங்கலாம் (through ECS Payment).
IFSC Code : IDIB000K204 Micr Code : 600019175
Account No. 759144235 (Indian Bank, Indira Nagar Branch, Chennai – 20.)